உ

# 𑌶𑍍𑌰𑍀𑌮𑌨𑍍 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰 𑌸𑍂𑌤𑍍𑌰𑌂

## 𑌶𑍍𑌰𑍀 𑌨𑌂𑌦𑌿𑌕𑍇𑌶 𑌕𑌾𑌶𑌿𑌕𑌾 𑌸𑌹𑌿𑌤𑌂

சைவஸித்தாந்த ஸூத்திரம் எனக்கருதப்படும்

# ஸ்ரீமன் மஹேஶ்வர ஸூத்ரம்

## ஸ்ரீ நந்திகேஶ காஶிகை உரையுடன்



தமிழாக்கம்

வாமதேவஶிவம் ஶிவஸ்ரீ டாக்டர் சபாரத்ன சிவாச்சாரியார்

வெளியீடு

**ஆகம ஆலயம்**

1/ 1B, அபிராமி அடுக்ககம், கற்பகாம்பாள் நகர்,

திருமயிலை . சென்னை 600 004



நாலேழ் (28) ஆகமங்களையும் நான்மறைகளையும்
அருளிய
நாயக மூர்த்தி



செல்வ நெடுமாடம் சென்று சேண் ஓங்கிச்
செல்வ மதிதோயச் செல்வம் உயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
செல்வன் கழல்ஏத்தும் செல்வம் செல்வமே

\- திருஞானசம்பந்தப் பெருமான்

உ

# 𑌶𑍍𑌰𑍀𑌮𑌨𑍍 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰 𑌸𑍂𑌤𑍍𑌰𑌮𑍍

## 𑌶𑍍𑌰𑍀 𑌨𑌨𑍍𑌦𑌿𑌕𑍇𑌶 𑌕𑌾𑌶𑌿𑌕𑌾 𑌸𑌹𑌿𑌤𑌮𑍍

சைவஸித்தாந்த ஸூத்திரம் எனக்கருதப்படும்

# ஸ்ரீமன் மஹேஶ்வர ஸூத்ரம்

## ஸ்ரீ நந்திகேஶ காஶிகை உரையுடன்

தமிழாக்கம்

வாமதேவஶிவம் ஶிவஸ்ரீ டாக்டர் சபாரத்ன சிவாச்சாரியார்

வாமதேவசிவம் சிவஸ்ரீ **Dr S. P. சபாரத்ன சிவாச்சார்யார்** -
வாமதேவ சிவசக்தி **ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி சபாரத்னம்**

அவர்களுக்கு
நந்தனஞு ஆடி மீ 17 ஆம் நாள் (01-08-2012)
சென்னை மயிலையில் நடைபெற்ற
**பீமரத ஶாந்தி**
வைபவத்தின் போது வெளியிடப்பட்டது.

வெளியீடு

**ஆகம ஆலயம்**
1/1B, அபிராமி அடுக்ககம்,
கற்பகாம்பாள் நகர்,
மயிலாப்பூர் - சென்னை 600 004

உ

திருச்சிற்றம்பலம்

# முன்னுரை

“𑌯𑌸𑍍𑌯𑍋𑌰𑍍𑌧𑍍𑌵𑍇 𑌦𑌕𑍍𑌷𑌪𑌾𑌣𑍌 𑌵𑌿𑌨𑌿𑌹𑌿𑌤𑌡𑌮𑌰𑍋𑌰𑍍𑌮𑌾𑌤𑍃𑌕𑌾𑌵𑌰𑍍𑌣𑌰𑍂𑌪𑌂
𑌤𑍍𑌰𑍈𑌚𑌤𑍍𑌵𑌾𑌰𑌿𑌂𑌶𑌦𑌰𑍍𑌣𑌂 𑌚𑌤𑍁𑌰𑌧𑌿𑌕𑌦𑌶𑌾𑌲𑌙𑍍𑌕𑍃𑌤𑌂 𑌸𑍂𑌤𑍍𑌰𑌜𑌾𑌲𑌮𑍍।
𑌜𑌾𑌤𑌂 𑌯𑌤𑍍𑌤𑌦𑍍𑌗𑍃𑌹𑍀𑌤𑍍𑌵𑌾 𑌪𑌣𑌿𑌨𑌸𑍁𑌤𑌮𑍁𑌖𑌾𑌃 𑌶𑌬𑍍𑌦𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌕𑌲𑍍𑌪𑌂
𑌤𑌤𑍍𑌤𑌚𑍍𑌛𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑍍𑌯𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌦𑌰𑌹𑌸𑌿𑌤𑌮𑍁𑌖𑌂 𑌕𑍁𑌞𑍍𑌚𑌿𑌤𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌂 𑌭𑌜𑍇𑌽𑌹𑌮𑍍॥”

𑌕𑍁𑌞𑍍𑌚𑌿𑌤𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌸𑍍𑌤𑌵𑌃 - 63

**“யஸ்யோர்த்வே தக்ஷபாணௌ விநிஹித டமரோர் மாத்ருகாவர்ணரூபம்
த்ரைசத்வாரிம்ஶதர்ணம் சதுரதிக தஶாலங்க்ருதம் ஸூத்ரஜாலம்
ஜாதம் யத்தத்க்ருஹீத்வா பணனஸுதமுகாஃ ஶப்தஶாஸ்த்ராதி கல்பம்
தத்தச்சாஸ்த்ராண்யகுர்வன் தரஹஸிதமுகம் குஞ்சிதாங்க்ரிம் பஜேஹம்”**

**குஞ்சிதாங்க்ரிஸ்தவஃ - 63**

“ஸ்ரீ நடராஜப்பெருமானின் உயர்த்தப்பட்ட வலதுகரத்திலுள்ள டமருகத்திலிருந்து மாத்ருகை ரூபங்களாகவும் 43 எழுத்துக்களோடு கூடியவையாகவும் விளங்கும் 14 ஸூத்திரங்கள் வெளிப்பட்டன. பணனமுனிவரின் குமாரரான பாணினி முதலான முனிபுங்கவர்கள் அந்தப் பதினான்கு ஸூத்திரங்களும் வியாகரண சாஸ்திரம் முதலான நூல்களுக்கு அடிப்படையாக விளங்குபவையாகும் எனப்போற்றி ஏற்றுக்கொண்டு தத்தம் வியாகரண நூல்களை இயற்றி அருளினர். அத்தகைய பதினான்கு ஸூத்திரங்களைத் தமது டமருகத்திலிருந்து தோற்றுவித்தவரும் குமிண்சிரிப்பால் பொலிவு பெற்றிருக்கும் திருமுகத்தை உடையவருமான ஸ்ரீ நடராஜப் பெருமானுடைய குஞ்சித பாதத்தை(தூக்கிய திருவடியை)ப் போற்றுகின்றேன்.”

ஸ்ரீமத் சித்ஸபா நாயகர் ஆனந்த நடனம் செய்தருளியபோது நடனம் முடியும் தருணத்தில் ஸனகர் ஸநந்தனர் முதலான முனிபுங்கவர்களுக்குத் தனது ஸ்வரூப லக்ஷண ரகசியங்களைப் புலப்படுத்தும் நோக்கத்துடன் டமருகத்தை அசைத்து அதீதமான நாதங்களைத் தோற்றுவித்து அருளினார். இத்தகைய ரகசியங்களைச்

சொற்களால் விளக்கிக்காட்ட இயலாது என்பதால் அதீதமான நாதங்களால் உணர்த்தி அருளினார். அவ்வாறு தோற்றுவிக்கப்பட்ட நாதங்களே 43 எழுத்துக்களை உள்ளடக்கிய 14 ஸூத்திரங்களாக வடிவுபெற்றன. இந்தச் சூத்திரங்களே மஹேஶ்வர ஸூத்திரம் எனவும் ஆதிஸூத்திரம் எனவும் சிவஸூத்திரம் எனவும் தொகுப்புப் பெயர்களால் அழைக்கப் படுகின்றன.

நேரிடையாகவே கேட்க நேர்ந்தாலும் ஸனகர் முதலான முனிவர்களால் இந்தச் சூத்திரங்களின் ஆழ்தளத்தில் அடங்கியுள்ள நுட்பமான கருத்துக்களை நன்கு விளங்கிக்கொள்ள இயலவில்லை. எனவே அவர்கள் பகவான் ஸ்ரீ நந்திகேஶ்வரப் பெருமானை அணுகி இந்தச்சூத்திரங்களில் பொதிந்துள்ள ஸூக்ஷ்மார்த்தங்களை விளக்கி அருளுமாறு வேண்டிக்கொண்டனர். ஸ்ரீருத்திரத்தை நூறு லக்ஷம் முறை பாராயணம் செய்து ஸ்ரீ நடராஜப் பெருமானின் பரிபூரண அனுக்ரஹத்திற்குப் பாத்திரராகிக் கணநாயகராக விளங்கும் சிறப்பினையும் கைலை மலை ரக்ஷகராகத் திகழும் உயர் பேற்றினையும் பெற்றுள்ள ஸ்ரீ நந்தியெம்பெருமான் அந்த முனி புங்கவர்களிடம் கருணைகொண்டு மஹேஶ்வர ஸூத்திரங்களில் அடங்கியுள்ள நுட்பமான கருத்துக்களையெல்லாம் உபதேசித்து அருளினார். அந்த உபதேசத்தின் சாரமே ஸ்ரீ நந்திகேஶ காஶிகை என்னும் திருநூலாகத் திகழ்கிறது.

முனிபுங்கவர்கள் ஸ்ரீநந்தியெம்பெருமானை வேண்டிக்கொண்டது உலகிற்குப் பேருபகாரமாக அமைந்துவிட்டது. ஸனகர் முதலான முனிவரர்கள் வேண்டிக்கொண்டதால் வெளிப்பட்ட ஸ்ரீநந்திகேஶ காஶிகை இல்லாவிட்டால் பதினான்கு ஸூத்திரங்களுள் ஒன்றைக் கூட நம்மால் விளங்கிக்கொள்ள இயலாது.

ஸ்ரீநந்திகேஶ காஶிகை ஸனகர் முதலான உயர்நிலை முனிவர்களுக்குப் போதுமானதாகத் திகழ்ந்தது. ஆனால் தீக்ஷை பெற்று ஓரளவு பக்குவம்பெற்றுள்ளவர்களுக்கும் ஸ்ரீநந்திகேஶ காஶிகை விளங்கிக்கொள்வதற்குக் கடினமாக இருந்ததால் ஸ்ரீ உபமன்யு முனிவர் தத்வ விமர்ஶினீ என்னும் பெயரில் விளக்கநூல் ஒன்றை அளித்துள்ளார்.

சைவசித்தாந்தத்தின் ஆணிவேராகத் திகழ்வது சிவம் முதல் நிலம் வரை உள்ள 36 தத்துவங்களைப்பற்றிய ஞானபோதமாகும். இந்த 36 தத்துவங்களும் எங்கிருந்து எவ்வாறு வெளிப்படுகின்றன என்பதை நுட்பமாகப் புலப்படுத்துபவையே மஹேஶ்வர

ஸூத்திரங்கள். இந்த வெளிப்பாட்டு முறையை நன்கு விளக்கிக் கூறுவதே ஸ்ரீநந்திகேஶ காஶிகை ஆகும்.

அமெரிக்கநாட்டு ஹவாய்த் தீவில் அமைந்துள்ள கௌவை ஆதீனத்தின் குருமஹா ஸந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ போதிநாத வேலன் ஸ்வாமிகளின் அருளாணைக்கு இணங்கி ஸ்ரீநந்திகேஶ காஶிகையை இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக் கொடுத்தேன். இப்பொழுது அவர்களின் அனுமதியைப் பெற்று அந்நூல் தமிழில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது.

நமது ஆதிசைவ மரபினர்க்கு மஹேஶ்வர ஸூத்திர சிந்தனை அவசியம் என்பதால் ஸ்ரீமன் மஹேஶ்வர ஸூத்திரம் என்பது தமிழாக்கத்துடன் கூடிய ஸ்ரீநந்திகேஶ காஶிகையுடன் எளியேனின் பீமரதஶாந்தி வைபவத்தில் ஈஶ்வர க்ருபையை முன்னிட்டு வெளியிடப் படுகிறது.

ஸ்ரீநந்தியெம் பெருமான் சிவயோகமரபுக்கு வாய்த்த தனிப் பெரும் ரக்ஷகர். அவர் அளித்துள்ள உரை தனிப் பெரும் சிறப்பு வாய்ந்தது. முழுமையானது. ஆனால் மேலும் ஸூக்ஷ்மமான உட்கருத்துக்கள் பலவற்றை ஸூசகமாகவே புலப்படுத்தியுள்ளார். அத்தகைய நுட்பங்களையெல்லாம் அவரவர் தமது தியானத்தாலும் ஆழ்ந்த சிந்தனையாலும் அனுபவபூர்வமாக உணர்ந்துகொள்ள வேண்டும்.

தமிழ் உரைவிளக்கத்தைப் பயிலும் சைவ அன்பர்கள் இதனைப் பயில்வதோடு நின்று விடாமல் தொடர்ந்து தத்துவ தாத்துவிக சிந்தனையிலும் சிவதியானத்திலும் ஈடுபட்டு சிவயோகநெறியில் மேன்மேலும் உயர்ந்து பரிபூரணமான சிவானந்த அனுபூதிச் செல்வர்களாக விளங்கும் வகையில் தம்மை நெறிப்படுத்திக் கொள்வார்களாக.

அன்புடன்

**வாமதேவசிவம் சபாரத்தினம்**

உ
திருச்சிற்றம்பலம்

ஆதிஸூத்திரங்கள் எனவும் சிவஸூத்திரங்கள் எனவும் வழங்கப்படும்

# மஹேஶ்வர ஸூத்திரங்கள்

அ இ உ ண்

ரு லு க்

ஏ ஓங்

ஐ ஔச்

ஹயவரட்

லண்

ஞமஙணநம்

ஜபஞ்

கடதஷ்

ஜபகடதஶ்

கபசடதசடதவ்

கபய்

ஶஷஸஹர்

ஹல்

உ

# ஸ்ரீ நந்திகேஶ காஶிகா

ஸ்ரீமன் மஹேஶ்வர ஸூத்திரத்தில் அடங்கியுள்ள
சைவசித்தாந்த நுட்பங்களை விளக்கிக்கூறும்

# ஸ்ரீ நந்திகேஶ காஶிகை

ஸ்ரீ நந்திகேஶ்வரப் பெருமானால் அருளப்பட்டது

1

ந்ருத்தாவஸானே நடராஜராஜோ நநாத டக்காம் நவபஞ்சவாரம் ।
உத்தர்த்துகாமஸ் ஸநகாதி ஸித்தானேதத்விமர்ஶே ஶிவஸூத்ரஜாலம் ॥

ந்ருத்தாவஸானே நடராஜராஜோ நநாத டக்காம் நவபஞ்சவாரம் ।

உத்தர்த்துகாமஸ் ஸனகாதி ஸித்தான் ஏதத்விமர்ஶே ஶிவஸூத்ர ஜாலம் ॥

தமது ஆனந்த நடனம் நிறைவுபெறும் தருணத்தில் ஸனகர் முதலான ஸித்த புருஷர்கள் ஸித்திநிலைகளில் மேன்மேலும் உயர்ச்சிபெற்று விளங்குவதற்காகவும் அவர்கள் அதீதமான சிவானுபவத்தில் திளைத்து இருக்கச் செய்வதற்காகவும் ஸ்ரீ நடராஜ ராஜேஶ்வரர் உயரே தூக்கிய தனது வலது கரத்திலுள்ள டமருகத்தை அசைத்து 14 முறை ஒலித்து ஸூத்திரங்களைத் தோற்றுவித்தார். சிவஸூத்திர ஜாலம் (திரட்சி) எனப்படும் அந்தச் சூத்திரங்களின் உட்பொருளை இப்பொழுது விளக்குகிறேன்.

2

அத்ர ஸர்வத்ர ஸூத்ரேஷு ஹ்யந்த்யம் வர்ணம் சதுர்தஶம் ।
தாத்வர்த்தம் ஸமுபாதிஷ்டம் பாணின்யாதீஷ்ட ஸித்தயே ॥

அத்ரஸர்வத்ர ஸூத்ரேஷு ஹ்யந்த்யம் வர்ணம் சதுர்தஶம் ।

தாத்வர்த்தம் ஸமுபாதிஷ்டம் பாணின்யாதீஷ்ட ஸித்தயே ॥

இந்தச் சூத்திரத்திலும் ஏனைய சூத்திரங்களிலும் இறுதியில் உள்ள ஒற்றெழுத்து தனக்கு முன் அமைந்துள்ள எழுத்துக்கள் தொடர்பான வேர்ச்சொற்களில் நுட்பமாகப் பொதிந்துள்ள

ரகசியங்களைப் புலப்படுத்தவும் பாணினி முதலான முனிவர்கள் தாம் விரும்பிய வண்ணம் செவிக்குப் புலனாகுவனவாகவும் புலன் ஆகாதனவாகவும் விளங்கும் நாதங்களைப் பற்றிய ஞானத்தில் தேர்ச்சி பெற்று விளங்குமாறு செய்யவும் அமைந்துள்ளது.

3

𑌅𑌕𑌾𑌰𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌰𑍂𑌪𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌨𑍍 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌵𑌸𑍍𑌤𑍁𑌷𑍁 ।

𑌚𑌿𑌤𑍍𑌕𑌲𑌾𑌂 𑌇𑌂 𑌸𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌜𑌗𑌦𑍍𑌰𑍂𑌪 𑌉𑌣𑍀𑌶𑍍𑌵𑌰𑌃 ॥

அகாரோ ப்ரஹ்மரூபஸ்ஸ்யான் நிர்குணஸ் ஸர்வ வஸ்துஷு ।

சித்கலாம் இம் ஸமாஶ்ரித்ய ஜகத்ரூப உணீஶ்வரஃ ॥

அகாரம் என்பது ஸத்வம் முதலான மூன்று குணங்களிலிருந்து நீங்கியுள்ள பரபிரம்மத்தின் வடிவமாகும். பரபிரம்மமாக விளங்கும் மஹேஶ்வரர் தன்னை விட்டு எப்பொழுதும் பிரியாமல் இருக்கும் சிற்கலை எனும் சக்தி வாயிலாகத் தனது பரிக்கிரக சக்தியாக விளங்கும் மாயை என்பதில் பிரவேசித்து உலகங்களைத் தோற்றுவித்து அவையனைத்தையும் மற்றும் உள்ள அனைத்துப் பொருள்களையும் வியாபிப்பவராகி விளங்குகிறார்.

அ இ உண் எனும் முதற்சூத்திரத்தில் அ என்பது பரபிரம்மம். இ என்பது பரிக்கிரக சக்தியாகிய மாயை. உ என்பது ஸர்வ வியாபி என்பதைக் குறிக்கும். இறுதி ஒற்றெழுத்தாகிய ண் என்பது இறைவன் ஶப்த பிரபஞ்சம் அர்த்தப் பிரபஞ்சம் ஆகியவற்றின் வடிவாகி அவற்றை வியாபிக்கிறார் எனப் பொருள் தரும்.

உலகங்களைத் தோற்றுவித்து என்பதில் உலகங்கள் எனும் சொல் ஒலிமயமான உலகம், பொருள் மயமான உலகம் ஆகிய இரண்டையும் குறிக்கும்.

4

𑌅𑌕𑌾𑌰𑌃 𑌸𑌰𑍍𑌵𑌵𑌰𑍍𑌣𑌾𑌗𑍍𑌰𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌃 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 ।

𑌆𑌦𑍍𑌯𑌮𑌨𑍍𑌤𑍍𑌯𑍇𑌨 𑌸𑌂𑌯𑍋𑌗𑌾𑌦𑌹𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌵 𑌜𑌾𑌯𑌤𑍇 ॥

அகாரஸ் ஸர்வ வர்ணாக்ர்யஃ ப்ரகாஶஃ பரமேஶ்வரஃ ।

ஆத்யமந்த்யேன ஸம்யோகாத் அஹமித்யேவ ஜாயதே ॥

அகார அக்ஷரம் 51 அக்ஷரங்களுள் முதலாவதும் முதன்மையானதுமாகும். அது தானாகவே ஒளிர்வது (ஸ்வயம் பிரகாசமானது). முதன்மைத் தன்மையாலும் ஒளியாலும்

பரமேஶ்வரனுடன் ஐக்கியப்பட்டிருப்பது. முதல் எழுத்தான அகாரமும் இறுதி எழுத்தான ஹகாரமும் நன்கு இணைவதால் அஹம் எனும் சொல் தோன்றுகிறது.

**அகாரம் சுயமாகவே ஒளிர்ந்து மற்றைய எழுத்துக்கள் அனைத்தையும் ஒளிரச்செய்வது.**

**அகாரமும் ஹகாரமும் இணைவதால் தோன்றும் அஹம் என்பது உலகியல் நிலையில் ஜீவான்மாவையும் பர நிலையில் பரமாத்மாவையும் குறிக்கும். எந்தவகை உயிராக இருந்தாலும் அந்த உயிரினுள்ளே ஸதாஸர்வ காலமும் நான் நான் எனத் தோன்றிக் கொண்டிருக்கும் உணர்வே அஹம் என்பது. இந்த நான் எனும் உணர்வு தான் எனும் அகம்பாவத்தால் தோன்றுவதன்று.**

**தான் சிவத்தின் அம்சம் என இயல்பாக எழும் உணர்வே அஹம் என்பது.**

**சாக்த மரபில் அகாரம் அனுத்தர லிபி (தனக்கு மேற்பட்ட ஒன்று எதுவும் இல்லாதது) எனவும் ஹகாரம் விமர்ஶ லிபி (பொருள்களின் தோற்றத்துக்கு இடம் கொடுப்பது) எனவும் வழங்கப்படும்.**

5

𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑌰𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌜𑍍𑌞𑌪𑍍𑌤𑌿𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 𑌇𑌦𑌂 𑌜𑌗𑌤𑍍।
𑌜𑍍𑌞𑌪𑍍𑌤𑍇𑌰𑍍𑌬𑌭𑍂𑌵 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍀 𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌵𑌾𑌕𑍍 𑌤𑌤𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌾॥

ஸர்வம் பராத்மகம் பூர்வம் க்ஞப்திமாத்ரம் இதம் ஜகத் ।
க்ஞப்தேர்பபூவ பஶ்யந்தீ மத்யமாவாக் ததஃ ஸ்ம்ருதா ॥

படைப்புக்கு முன்னர் எல்லா நாதங்களும் பரை எனும் வாக்கு மயமாகவே இருந்தன. பரையிலிருந்து வெளிப்பட்ட எல்லா உலகங்களும் இது இது எனக் குறிக்கப்படும் இதம் என்னும் நிலையிலேயே இருந்தன. அறியப்படும் நிலையில் மட்டுமே இருந்தன. ஞப்தி எனப்படும் பரை வாக்கிலிருந்து பஶ்யந்தி எனும் வாக்குத் தோன்றியது. பின்னர் பஶ்யந்தி வாக்கிலிருந்து மத்யமை எனும் வாக்குத் தோன்றியது.

6

𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑍇 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌿 𑌚𑌕𑍍𑌰𑌾𑌖𑍍𑌯𑍇 𑌵𑍈𑌖𑌰𑍀 𑌸𑌾 𑌮𑌤𑌾 𑌤𑌤𑌃।
𑌜𑍍𑌞𑌪𑍍𑌤𑍍𑌯𑌾𑌵𑌿𑌰𑍍𑌭𑌾𑌵 𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌵𑌾𑌕𑍍 𑌸𑌮𑍀𑌰𑌿𑌤𑌾॥

வக்த்ரே விஶுத்தி சக்ராக்யே வைகரீ ஸா மதா ததஃ ।
க்ஞப்த்யாவிர்பாவ மாத்ராத்மா மத்யமாவாக் ஸமீரிதா ॥

மத்யமை வாக்கு விசுத்தி சக்கிரத்தை அடைந்து வாய் வழியாக வெளிப்படும் பொழுது வைகரி எனும் பெயரை அடைகிறது. வெளிப்படா நிலையில் ஞப்தி மாத்திரமாக(அறியப்படுவதாக மட்டுமே) இருந்த ஶப்த உலகம் வெளிப்படும் நிலைக்கு வரும்பொழுது மத்யமை எனப் பெயர் பெறுகிறது.

மத்யமை வாக்கிற்கு இடம் கழுத்து நிலையில் விளங்கும் விஶுத்தி சக்கிரமே. வாய் வழியாக வெளிப்படுவது வைகரி. ஆனால் இங்கே ஸ்ரீ நந்திகேஶ்வரர் விஶுத்தி சக்ரக்யே வைகரீ எனக் கூறுகிறார். சிவயோக மரபுக்கு ஏற்ப இவ்வாறு கூறப்படுகிறது. விஶுத்தியில் ஸ்தூல மத்யமையும் ஸூக்ஷ்ம வைகரியும் செயற்படும்.

7

*அகாரம் ஸந்நிதீக்ருத்ய ஜகதாம் காரணத்வத:।*

*இகாரஸ்ஸர்வவர்ணானாம் ஶக்தித்வாத் காரணம் மதம்॥*

அகாரம் ஸந்நிதீக்ருத்ய ஜகதாம் காரணத்வதঃ ।

இகாரஸ்ஸர்வவர்ணானாம் ஶக்தித்வாத் காரணம் மதம் ॥

அகாரத்துக்கு மிகவும் அருகில் இருந்துகொண்டு உலகத்தின் வெளிப்பாட்டுக்குக் காரணமாகவும் மற்றைய எழுத்துக்களுக்கு உட் சக்தியாகவும் விளங்கும் இகாரம் என்பது அனைத்து வகையான தோற்றங்களுக்கும் ஆதாரமாக விளங்கும் எழுத்து என அறியவேண்டும்.

8

*ஜகத்ஸ்ரஷ்டும் அபூத்வாஞ்சா யதாஹ்யாஸீத் ததாபவத்।*

*காமபீஜம் இதி ப்ராஹுர் முனயோ வேதபாரகா:॥*

ஜகத்ஸ்ரஷ்டும் அபூத்வாஞ்சா யதாஹ்யாஸீத் ததாபவத் ।

காமபீஜம் இதி ப்ராஹுர் முனயோ வேதபாரகாঃ ॥

உலகத்தைப் படைக்கவேண்டும் எனும் இச்சை ஈஶ்வரனுடைய உள்ளத்தில் தோன்றிய பொழுது ஈகாரம் வெளிப்பட்டது. வேதங்களைக் கற்றுத் துறைபோகிய பெரியோர் இந்த ஈகார எழுத்தையே காமபீஜம் எனச் சிறப்பித்துக் கூறுகின்றனர்.

அகாரத்துடன் இணைந்து இகாரமானது அடுத்துத் தோன்றும் எழுத்துகளுக்குச் சக்தியையும் பிரகாசத்தையும் கொடுக்கிறது.

இகாரத்தின் நீட்சியே ஈகாரம். இறைவனின் திருவுள்ளத்தில் உலகைப் படைக்க வேண்டும் என்னும் இச்சையும் ஈகார அக்ஷரமும் ஒரே

சமயத்தில் எழுகின்றன. படைக்கவேண்டும் எனும் இச்சையும் ஈகாரமும் இணைபிரியாதவை. இவை சேர்ந்தே இயங்குகின்றன. அதனால்தான் ஈகார எழுத்து காம பீஜம் எனச் சிறப்பித்துக் கூறப்படுகிறது. காமம் - இச்சை

ஸ்ரீவித்யா ஸம்ப்ரதாயத்தில் ஈகாரம் காமகலா பீஜம் என விசேஷமாகப் ப்ரஸ்தாபிக்கப் படுகிறது.

தாம் பத்மினீம் ஈம் ஶரணமஹம் ப்ரபத்யே

என ஸ்ரீஸூக்தத்திலும் துதிக்கப்படுகிறது.

9

𑌅𑌕𑌾𑌰𑍋 𑌜𑍍𑌞𑌪𑍍𑌤𑌿𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌇𑌕𑌾𑌰𑌃 𑌚𑌿𑌤𑍍𑌕𑌲𑌾 𑌮𑌤𑌾।
𑌉𑌕𑌾𑌰𑍋 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌹𑍁𑌃 𑌵𑍍𑌯𑌾𑌪𑌕𑌤𑍍𑌵𑌾𑌨𑍍 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌃॥

அகாரோ க்ஞப்திமாத்ரம் ஸ்யாத் இகார: சித்கலா மதா ।
உகாரோ விஷ்ணுரித்யாஹு: வ்யாபகத்வான் மஹேஶ்வர:॥

அகாரம் ஞப்தி மாத்திரமாக விளங்குவது. இகாரம் சிற்கலை எனக் கருதப்படுவது. உகாரம் விஷ்ணு எனப் பெரியோர்கள் கூறுகின்றனர். ஞப்தி மாத்திரமாக இருந்த பரம்பொருள் ஐந்தொழில் நிமித்தமாகச் சிற்கலை எனும் சக்தியுடன் இணைந்து உலகங்களைப் படைத்து அவற்றையும் அவற்றுக்குள்ளும் விஷ்ணுத் தன்மையால் வியாபித்து விளங்கும் பொழுது மஹேஶ்வரர் என அழைக்கப்படும் நிலைக்கு வருகிறது.

10

𑌋𑌌𑌕𑍍 𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑍋 𑌮𑌾𑌯𑌾𑌂 𑌵𑌿𑌸𑍍𑌤𑌾𑌰𑌿𑌤 𑌚𑌰𑌾𑌚𑌰𑌂।
𑌪𑌤𑍍𑌨𑍀𑌂 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌚𑌿𑌦𑍍𑌰𑍂𑌪𑍋 𑌜𑌨𑌯𑌾𑌮𑌾𑌸 𑌕𑍇𑌵𑌲𑌃॥

ருலுக் ஸர்வேஶ்வரோ மாயாம் விஸ்தாரித சராசரம் ।
பத்னீம் ஆஶ்ரித்ய சித்ரூபோ ஜனயாமாஸ கேவல:॥

ருகாரம் ஸர்வேஶ்வரரான சிவபெருமானைக் குறிக்கும். லுகாரம் சின்மய வடிவான சிவசக்தியைக்குறிக்கும். சின்மயமான சிற்சக்தியோடு இணைந்து சிவபெருமான் மாயையை உபாதானமாகக் கொண்டு அசையும் பொருள்களாலும் அசையாப் பொருள்களாலும் ஆகிய உலகைப் படைத்து அதனை விரிவடையச் செய்கிறார். இத்தகைய படைப்புத் தொழிலை அவர் ஒருவராகவே செய்கிறார். வெளிப்படாத ஒன்றிலிருந்து வெளிப்படச் செய்கிறார்.

11

[illegible]

[illegible]

வ்ருத்திவ்ருத்திமதோரத்ர பேதலேஸோ ந வித்யதே।

சந்த்ர சந்த்ரிகயோர்யத்வத் ததா வாகர்த்தயோரபி॥

நிலவுக்கும் நிலவின் கதிர்களுக்கும் இடையே பேதம் என்பதைச் சிறிதளவும் காணமுடியாது. அவ்வாறே சொல்லுக்கும் சொல்லின் பொருளுக்கும் இடையே சிறிதளவேனும் பேதம் காண இயலாது. அதுபோன்றே விருத்திகளை உள்ளடக்கியுள்ளவருக்கும் விருத்திகளுக்கும் இடையே சிறிதளவேனும் பேதம் காண இயலாது.

12

[illegible]

[illegible]

ஸ்வேச்சயா ஸ்வஸ்ய சிச்சக்த்யா விஸ்வமுன்மீலயத்யஸௌ ।

வர்ணானாம் மத்யமக்லீபம் ரு லு வர்ணத்வயம் விது: ॥

சிவபெருமான் தமது இச்சையாலும் அவிணாபாவ சம்பந்தத்துடன் தம்மிடம் உள்ள சிற்சக்தியாலும் மாயையிலிருந்து உலகங்களைத் தோற்றுவித்து அருள்கிறார். ரு லு என்னும் இரண்டு எழுத்துக்களும் 51 எழுத்துக்களுக்கிடையே உள்ள நபும்ஸக வர்க்கத்தைச் சார்ந்தவை. சிவனில் சக்தியும் சக்தியில் சிவனும் விளங்குவதால் சிவபெருமானும் சிற்சக்தியும் ஆணுக்கும் பெண்ணுக்கும் மத்யமமான நபும்ஸக எழுத்துக்களாகிய ருகாரத்தாலும் லுகாரத்தாலும் முறையே குறிக்கப்படுகின்றனர்.

13

[illegible]

[illegible]

ஏ ஓங் மாயேஸ்வராத்மைக்ய விக்ஞானம் ஸர்வ வஸ்துஷு ।

ஸாக்ஷித்வாத் ஸர்வபூதானாம் ஸ ஏக இதி நிஸ்சிதம் ॥

14

ஏ ஓ என்னும் இரண்டு எழுத்துக்களும் மாயைக்கும் ஈஶ்வரனுக்கும் இடையே உள்ள ஐக்கிய நிலையை உணர்த்து கின்றன. இத்தகைய ஐக்கிய நிலையை எல்லாப் பொருள்களிலும் காணலாம். வெளிப்பட்டுத் தோன்றியுள்ள அனைத்துப் பொருள்களுக்கும் சிவபெருமான் ஸாக்ஷி சைதன்யமாக விளங்குவதால் சிவபெருமானே தனிமுதற் பரம்பொருள் எனவும் சிவத்துக்கு அன்னியமாக வேறு ஒரு பொருளும் இல்லை எனவும் உறுதிப்பாட்டுடன் உணர வேண்டும்.

14

𑌐 𑌔𑌚𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌸𑍍𑌸𑌨𑍍 𑌜𑌗𑌤𑍍𑌸𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌗𑌤𑌂 𑌤𑌤𑌃।
𑌇𑌚𑍍𑌛𑌯𑌾 𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑌂 𑌕𑌰𑍍𑌤𑍁𑌂 𑌆𑌵𑌿𑌰𑌾𑌸𑍀𑌨𑍍 𑌮𑌹𑌾𑌮𑍁𑌨𑌿𑌃॥

ஐ ஔச் ப்ரஹ்மஸ்வரூபஸ்ஸன் ஜகத்ஸ்வாந்தர்கதம் ததஃ ।
இச்சயா விஸ்தரம் கர்த்தும் ஆவிராஸீன் மஹாமுனிஃ ॥

ஐகார அக்ஷரம் சிவபெருமானின் சின்மயமான நிஷ்கள நிலையைக் குறிக்கிறது. ஔ எனும் அக்ஷரம் சக்திகலா மந்திரங்களால் உருவாகுவதும் ஸகள நிலையில் சிவபெருமான் ஏற்றுக்கொள்வதுமான ஸகளத்திருமேனியைக் குறிக்கிறது. தமக்கு உள்ளேயே ஒடுங்கி அடங்கியுள்ள உலகங்களை வெளிப்படுத்தி மேன்மேலும் விரிவு படுத்துவதற்காக அவ்வப்போது தருணத்திற்கு ஏற்பச் சக்திமந்திர மயமான சரீரம் தாங்கிப் பெரிய சிவயோகி (தக்ஷிணாமூர்த்தி) எனவும் சதாசிவர் எனவும் சிவபெருமான் விளங்குகிறார்.

அகாரம் நீங்கலாக மற்றைய எழுத்துக்களுள் ஓர் எழுத்து தனக்கு முன்னுள்ள எழுத்தின் சக்தியையும் சேர்த்துக்கொண்டு விளங்குகிறது. எனவே ஐகார எழுத்தில் அகாரம் முதல் ஏகாரம் வரை உள்ள 11 எழுத்துக்களின் சக்திக் கூறுகள் திரண்டுள்ளன. அகார இகார இணைப்பே ஐகாரம். இந்த இணைப்பு சிவனும் சக்தியும் ஐக்கியப்பட்டு விளங்குவதைக் காட்டுகிறது. ஔ எனும் எழுத்தில் அகாரமும் உகாரமும் இணைந்து விளங்குகின்றன. இந்த எழுத்தில் அ முதல் ஓ வரையிலுள்ள 13 எழுத்துக்களின் சக்திக்கூறுகள் அனைத்தும் திரண்டுள்ளன. ஔகாரம் சக்திமயமான சரீரம் கொண்டுள்ள சிவபெருமானைக் குறிக்கிறது. இறுதியிலுள்ள ச் எனும் ஒற்றெழுத்து சிவபெருமானின் படைப்புத் தொழிலைக் குறிக்கிறது.

ஓகாரம் எனும் பிரணவாக்ஷரம் பதின்மூன்றாவது எழுத்து. தனக்கு முன்னுள்ள 12 எழுத்துக்களுக்குரிய சக்திக்கூறுகளையும் சேர்த்துக் கொண்டு ஓகாரம் 13 சக்திகலைகளுடன் விளங்குகிறது. இந்தப்

பதின்மூன்று கலைகளிலிருந்து சிவம் முதல் பிரகிருதி வரை உள்ள 13 தத்துவங்களும் தோன்றுகின்றன.

சிவத்த்துவம், சக்திதத்துவம், ஸாதாக்கியம், ஈஶ்வர தத்துவம், சுத்தவித்யை, காலம், நியதி, மாயை, கலை, வித்யை, ராகதத்துவம், புருஷதத்துவம், பிரகிருதி எனும் 13 தத்துவங்கள் ஓகாரத்திலிருந்து தோன்றுகின்றன.

பதினான்காவது எழுத்தான ஔகாரத்திலுருந்து 14 புவனங்களும் ஸ்ரீசக்கிரத்தில் 14 கோணங்களைக் கொண்டுள்ளதான ஸர்வ ஸௌபாக்கிய தாயக சக்கிரமும் மற்றும் 14 என்னும் எண்ணிக்கையில் அமைந்துள்ள புவனக்கூறுகளும் வெளிப்படுகின்றன.

மஹாமந்த்ர தத்வப்ரகாஶினீ எனும் நூலில் இவ்விளக்கத்தை விரிவாகக் காணலாம்.



ஹூதவஞ்சகஜெதஸ்தாக ஹயவாரண ஜஹெஸ்வராக|

வெ்யாஜவாயும்பு வஹ்ந்யாவ்ய ஹூதாந்யாஸீக ஸ ஏவ ஹி||

பூதபஞ்சகமேதஸ்தாத் ஹயவரண் மஹேஶ்வராத் ।

வ்யோமவாய்வம்பு வஹ்ன்யாக்ய பூதான்யாஸீத் ஸ ஏவ ஹி ॥

மஹேஶ்வரரின் இச்சை தூண்டியும் செயற்படுத்தியும் விளங்க ஹ, ய, ர, வ எனும் நான்கு அக்ஷரங்களிலிருந்து ஐம்பெரும் பூதங்களுள் ஆகாயம், காற்று, நீர், நெருப்பு எனும் நான்கு பூதங்களும் தோன்றுகின்றன. இது போன்ற தோற்றங்கள் அனைத்திற்கும் மூலகாரணன் அனைத்தையும் அறியவும் செய்யவும் வல்ல சிவபெருமானே.

ஹகாரத்திலிருந்து ஆகாயமும் யகாரத்திலிருந்து காற்றும் வகாரத்திலிருந்து நீரும் ரகாரத்திலிருந்து நெருப்பும் தோன்றுகின்றன.

பூதங்களின் தோற்றமுறை ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், நிலம் என அமைவது. ஆனால் இங்கே காற்றுக்குப் பிறகு நெருப்பைக் கூறாமல் நீரைக் கூறுகிறார். இவ்வாறு கூறுவதற்குக் காரணம் உண்டு.

சிவயோக மரபின் ஆதிகுருவாகிய சிவபெருமான் யோகநெறிக்கு ஏற்ப ஆதார சக்கிரங்களின் அடிப்படையில் பூதங்களின் தோற்றமுறையை இவ்வாறு கூறுகிறார்.

மேலுருந்து கீழாக:

விஶுத்தி - ஆகாயம்

அனாஹதம் - காற்று

மணிபூரகம் - நீர்

ஸ்வாதிஷ்டானம் - நெருப்பு

மூலாதாரம் - நிலம்

நிலத்தோற்றத்தைப் பற்றிப் பின்னர் விளக்குகிறார்.

16

𑌹𑌕𑌾𑌰𑌾𑌦𑍍 𑌵𑍍𑌯𑍋𑌮𑌸𑌂𑌜𑍍𑌞𑌶𑍍𑌚 𑌯𑌕𑌾𑌰𑌾𑌦𑍍 𑌵𑌾𑌯𑍁𑌰𑍁𑌚𑍍𑌯𑌤𑍇।

𑌰𑌕𑌾𑌰𑌾𑌦𑍍 𑌵𑌹𑍍𑌨𑌿𑌸𑍍𑌤𑍋𑌯𑌂 𑌤𑍁 𑌵𑌕𑌾𑌰𑌾𑌦𑌿𑌤𑌿 𑌶𑍈𑌵𑌰𑌾𑌟𑍍॥

ஹகாராத் வ்யோமஸம்க்ஞஶ்ச யகாராத் வாயுருச்யதே ।

ரகாராத் வஹ்னிஸ்தோயம் து வகாராதிதி ஶைவராட் ॥

ஹகாரத்திலிருந்து ஆகாயம் தோன்றுகிறது. யகாரத்திலிருந்து காற்று. ரகாரத்திலிருந்து நெருப்பு. வகாரத்தில் இருந்து நீர். இவ்வாறு பூதங்களின் தோற்றமுறையைச் சிவயோக மரபுக்கு ராஜேஶ்வரராக விளங்கும் சிவபெருமான் உணர்த்துகிறார்.

சிவயோக நெறிக்கு ஏற்ப முன்னே பூதங்களின் தோற்றமுறையை மாற்றிக் கூறினாலும் இங்கே பூதங்கள் ஒன்றன்பின் ஒன்றாக எவ்வாறு தோன்றுகின்றன எனத் தெளிவு படுத்துகிறார்.

17

𑌆𑌧𑌾𑌰𑌭𑍂𑌤𑌂 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌚 𑌕𑌾𑌰𑌣𑌮𑍍।

𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑍍𑌰𑍇𑌤𑌸𑍍𑌤𑌤𑍋 𑌜𑍀𑌵𑌃 𑌕𑌾𑌰𑌣𑌤𑍍𑌵𑌾𑌲𑍍𑌲𑌶𑍀𑌰𑌿𑌤𑌮𑍍॥

ஆதாரபூதம் பூதானாம் அன்னாதீனாம் ச காரணம் ।

அன்னாத்ரேதஸ் ததோ ஜீவ꞉ காரணத்வால் லஶீரிதம் ॥

உடலோடு கூடியுள்ள அனைத்து உயிர்க்கூட்டங்களுக்கும் நிலமே ஆத்ாரத் தோற்றமாக விளங்குகிறது. நிலமே உணவு, தண்ணீர் முதலான அனைத்துத் தேவைகளையும் காடுக்கிறது. அன்னத்தில் இருந்து உயிர்ச் சத்தாகிய ரேதஸ் என்பது உண்டாகிறது. ரேதஸ் என்பிலிருந்து அந்தந்த உயிர்க்குரிய உடல் உண்டாகிறது. இவ்வாறு நிலமே இவை அனைத்திற்கும் அடிப்படையாகவும் ஆதாரமாகவும் விளங்குவதால் லகாரம் எனும் அக்ஷரத்திலிருந்து பூமி தோன்றுகிறது எனத் தனியே விசேஷமாகக் கூறப்படுகிறது.

இக்காரணத்தால்தான் பூமி மூலாதாரச் சக்கிரத்துடன் இணைத்துக் கூறப்படுகிறது.

18

𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑍌 𑌰𑍂𑌪𑌰𑌸 𑌗𑌨𑍍𑌧𑌾𑌶𑍍𑌚 𑌙𑌮𑌙𑌣𑌨𑍈𑌃।
𑌵𑍍𑌯𑍋𑌮𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌗𑍁𑌣𑌾 𑌹𑍍𑌯𑍇𑌤𑍇 𑌜𑌾𑌨𑍀𑌯𑌾𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌵𑌸𑍍𑌤𑍁𑌷𑍁॥

ஶப்தஸ்பர்ஶௌ ரூபரஸ கந்தாஶ்ச ஞமஙணநம் ।
வ்யோமாதீனாம் குணாஹ்யேதே ஜானீயாத் ஸர்வ வஸ்துஷு ॥

ஐம்பெரும் பூதங்களுக்குக் காரணமாக விளங்குபவை ஶப்தம், ஸ்பர்ஶம், ரூபம், ரஸம், கந்தம் எனப்படும் ஐந்து தன்மாத்திரைகளாகும். இவை முறையே ஞ, ம, ங, ண, ந என்னும் ஐந்து அக்ஷரங்களிலிருந்து வெளிப்படுகின்றன. ஶப்தம், ஸ்பர்ஶம், ரூபம், ரஸம், கந்தம் என்பவை முறையே ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், நிலம் என்பனவற்றின் விசேஷ குணங்களாகும். சரம் அசரம் ஆகிய எல்லாப் பொருள்களிலும் இந்த ஐந்தும் இடம் பெற்றிருப்பதை உணரவேண்டும்.

19

𑌵𑌾𑌕𑍍𑌪𑌾𑌣𑍀 𑌚 𑌜𑌪𑌞𑍍𑌜𑌾𑌸𑍀𑌤𑍍 𑌵𑌿𑌰𑌾𑌡𑍍𑌰𑍂𑌪𑌂 𑌚𑌿𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑌃।
𑌸𑌰𑍍𑌵𑌜𑌨𑍍𑌤𑍁𑌷𑍁 𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌸𑍍𑌥𑌾𑌵𑌰𑌾𑌦𑍌 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇॥

வாக்பாணீ ச ஜபஞ்ஞாஸீத் விராட்ரூபம் சிதாத்மநஃ ।
ஸர்வ ஜந்துஷு விக்ஞேயம் ஸ்தாவராதௌ ந வித்யதே ॥

சின்மயமாகவும் விராட்புருஷனாகவும் விளங்கும் சிவபெருமான் தூண்டிச் செயற்படுத்த ஜ ப எனும் அக்ஷரங்களிலிருந்து முறையே வாக்கு கை எனப்படும் இரண்டு கன்மேந்திரியங்கள் தோன்று கின்றன. இந்த இரண்டு கன்மேந்திரியங்களும் இயங்குபொருள் (சரம்) எனும் பிரிவில் அடங்கியுள்ள எல்லா உயிர்க்கூட்டங் களுக்கும் உண்டு. இயங்காப்பொருள் (அசரம்) எனும் பிரிவில் அடங்கியுள்ள தாவரம் மலை முதலானவற்றில் இவற்றைக் காண இயலாது.

20

𑌷𑌣𑍍𑌣𑌾𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑌾𑌂 𑌯𑍇 𑌕𑍋𑌶𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑌣𑌾 𑌹𑌿 𑌤𑍇।
𑌷𑌟𑍍𑌸𑍁 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌪𑌾𑌦𑌪𑌾𑌯𑍂𑌪𑌸𑍍𑌥𑌕𑌾𑌃॥

வர்காணாம் துர்யவர்ணா யே கர்மேந்த்ரிய கணா ஹி தே ।
கடதஷ் ஸர்வபூதானாம் பாதபாயூ உபஸ்தகঃ ॥

கவர்க்கம், டவர்க்கம், தவர்க்கம் எனும் மூன்று வர்க்கங்களுள் ஒவ்வொரு வர்க்கத்திலும் நான்காவது எழுத்தாக அமைந்துள்ள க, ட, த எனும் மூன்று அக்ஷரங்களிலிருந்து கன்மேந்திரிய வர்க்கத்தைச் சார்ந்தனவாக எஞ்சியுள்ள பாதம், பாயு, உபஸ்தம் எனும் மூன்று இந்திரியங்களும் தோன்றுகின்றன. இயங்குபொருள் (சரம்) எனும் பிரிவைச் சார்ந்துள்ள அனைத்து உயிர்வகைகளுக்கும் இவை தோன்றுகின்றன.

21

ஶ்ரோத்ர த்வங் நயனக்ராண ஜிஹ்வாதீந்த்ரிய பஞ்சகம்।
ஸர்வேஷாமபி ஜந்தூநாம் ஈரிதம் ஜபகடதஸ்॥

ஶ்ரோத்ர த்வங் நயநக்ராண ஜிஹ்வாதீந்த்ரிய பஞ்சகம் ।
ஸர்வேஷாமபி ஜந்தூனாம் ஈரிதம் ஜபகடதஶ் ॥

உடலெடுத்துள்ள அனைத்து உயிர்களுக்கும் செவி, தோல், கண், மூக்கு, நாக்கு எனப்படும் ஐந்து ஞானேந்திரியங்களும் முறையே ஜ, ப, க, ட, த எனும் ஐந்து அக்ஷரங்களிலிருந்து தோன்றுகின்றன. இவ்வாறு ஞானேந்திரியங்களின் தோற்றமுறை பெரியோர்களால் கூறப்பட்டுள்ளது.

செவி ஶப்த குணத்தால் ஆகாயத்துடன் தொடர்புடையது.
தோல் ஸ்பர்ஶ குணத்தால் காற்றுடன் தொடர்புடையது.
கண் ரூப குணத்தால் நெருப்புடன் தொடர்புடையது.
நாக்கு ரஸ குணத்தால் நீருடன் தொடர்புடையது.
மூக்கு கந்த குணத்தால் நிலத்துடன் தொடர்புடையது.

22

ப்ராணாதி பஞ்சகம் சைவ மனோபுத்த்யஹங்க்ருதிঃ।
பஹ்வ கரணத்வேன கபசடதசடதவ்॥

ப்ராணாதி பஞ்சகம் சைவ மனோபுத்திரஹங்க்ருதிঃ ।
பபூவ கரணத்வேன கபசடதசடதவ் ॥

தாத்துவிகத் தொடர்பான செயல்களுக்காகப் பிராணன், அபானன், வ்யானன், உதானன், ஸமானன் எனும் ஐந்து பிராணன்களும் க, ப, ச, ட, த எனப்படும் ஐந்து அக்ஷரங்களிலிருந்து முறையே தோன்றுகின்றன. உட்கருவிகள் (அந்தக் கரணங்கள்) எனச் செயற்படுவதற்காக மனம், புத்தி, அஹங்காரம் எனும் மூன்றும் ச, ட, த எனும் மூன்று அக்ஷரங்களிலிருந்து முறையே வெளிப்படுகின்றன.

23

வ௨௩ஃஇதீய வணொ௩ாதூாஃ வ௵ாணாஜ௸ாஃ வஞுவாயவஃ।

உ௰௵வ௨௩ து௵யாஜூாதா ஊஷஃகூ௱ண வ௩த்தயஃ॥

வர்கத்விதீய வர்ணோத்தாஃ ப்ராணாத்யாஃ பஞ்சவாயவஃ।

மத்யவர்க த்ரயாஜ்ஜாதா அந்தஃகரண வ்ருத்தயஃ॥

கவர்க்கம், சவர்க்கம், டவர்க்கம், தவர்க்கம், பவர்க்கம் எனும் ஐந்து வர்க்கங்களில் ஒவ்வொரு வர்க்கத்திலும் உள்ள இரண்டாவது எழுத்திலிருந்து பிராணன் முதலான ஐந்து வாயுக்களும் முறையே தோன்றுகின்றன. சவர்க்கம், டவர்க்கம், தவர்க்கம் எனும் மூன்றும் மத்திய வர்க்கம் எனப்படும். இந்த மூன்று வர்க்கங்களில் ஒவ்வொரு வர்க்கத்திலும் உள்ள முதலாவது எழுத்திலிருந்து மனம் முதலான உட்கருவிகள் மூன்றின் விருத்திகளும் வெளிப்படுகின்றன.

24

வ௵கூ௩தி வ௱௱ஷஂ ஸைவ ஸவெ௩ஷாஜெவ ஸ௱ஜதஂ।

ஸஂஹூ௱தஂ ஐதி விஜ்ஞேயஂ கவாஜ௸ாஜிதி நிஸ்ரிதஂ॥

ப்ரக்ருதி புருஷம் சைவ ஸர்வேஷாமேவ ஸம்மதம் ।

ஸம்பூதம் இதி விக்ஞேயம் கபாப்யாம் இதி நிஃசிதம் ॥

பிரகிருதி புருஷன் எனப்படும் இரண்டு தத்துவங்களும் எல்லாச் சமயத்தினராலும் ஏற்றுக்கொள்ளப் பட்டிருக்கின்றன. இந்த இரண்டு தத்துவங்களும் முறையே க எனும் அக்ஷரத்திலிருந்தும் ப எனும் அக்ஷரத்திலிருந்தும் தோன்றுகின்றன என அறியப் படுகின்றது. இவ்வாறு பெரியோர்களாலும் நிச்சயிக்கப்பட்டுள்ளது.

பிரகிருதி புருஷன் ஆகிய இரண்டு தத்துவங்களும் ஓகாரத்திலிருந்து தோன்றுகின்றன என முன்னர்க் கூறப்பட்டது. (பதினான்காவது ஶ்லோகம்)

இங்கே க ப எனும் இரண்டு அக்ஷரங்களிலிருந்து அவை தோன்றுகின்றன எனக் கூறப்படுகிறது.

பிரகிருதியைப் பற்றிய ஞானம் புருஷ தத்துவத்தைப் பற்றிய ஞானம் ஆகிய இரண்டும் ககாரத்திலிருந்தும் பகாரத்திலிருந்தும் முறையே தோன்றுகின்றன எனப் பொருள்கொள்ள வேண்டும்.

25

ஸத்த்வம் ரஜஸ்ச தம இதி குணானாம் த்ரிதயம் புரா।
ஸமாஶ்ரித்ய மஹாதேவ꞉ ஶஷஸைர் க்ரீடதி ப்ரபு꞉॥

ஸத்த்வம் ரஜஸ் தம இதி குணானாம் த்ரிதயம் புரா ।
ஸமாஶ்ரித்ய மஹாதேவ꞉ ஶஷஸர் க்ரீடதி ப்ரபு꞉ ॥

மஹாதேவராம் சிவபெருமான் படைப்புக்கு முன்னர் அப்ராக்ருதமாகத் தோன்றிய ஸத்த்வம், ரஜஸ், தமஸ் எனும் மூன்று குணங்களையும் ஆஶ்ரயித்து ஒவ்வோர் உயிரினுள்ளும் அதனைப் பக்குவப் படுத்துவதற்காக லீலைகளைச் செய்துகொண்டிருக்கிறார். பிராகிருத நிலையில் ஸத்த்வம், ரஜஸ், தமஸ் எனப்படும் மூன்றும் முறையே ஶ, ஷ, ஸ எனும் மூன்று அக்ஷரங்களிலிருந்து தோன்றுகின்றன.

26

ஶகாராத்ராஜஸோ பூதி꞉ ஷகாராத்தமஸோ பவ꞉।
ஸகாராத் ஸத்த்வ ஸம்பூதி꞉ இதி த்ரிகுணஸம்பவ꞉॥

ஶகாராத்ராஜஸோ பூதி꞉ ஷகாராத்தமஸோ பவ꞉ ।
ஸகாராத் ஸத்த்வ ஸம்பூதி꞉ இதி த்ரிகுண ஸம்பவ꞉ ॥

ராஜஸம் ஶகாரத்திலிருந்து தோன்றுகிறது. ஷகாரத்திலிருந்து தமோகுணம் வெளிப்படுகிறது. ஸகாரம் எனும் அக்ஷரத்திலிருந்து ஸத்துவகுணம் தோன்றுகிறது. முக்குணங்களின் தோற்ற முறையை இவ்வாறு உணர்ந்துகொள்ள வேண்டும்.

ததாதீதஃ வாஃ ஸாக்ஷீ ஸவாநுஹ விஹஃ।
அஹமாத்மா வரோ ஹஸ் ஸ்யாதிதி ஶம்ஹுஸ்ரோதஸெ॥

॥இதி நந்திகேஶ காஶிகா ஸமாப்தா ॥

தத்த்வாதீதஃ பரஃ ஸாக்ஷீ ஸர்வானுக்ரஹ விக்ரஹஃ ।
அஹமாத்மா பரோ ஹல் ஸ்யாதிதி ஶம்புஸ்திரோததே ॥

॥ இதி நந்திகேஶ காஶிகா ஸமாப்தா ॥

பரசிவம் எனும் ஏகவஸ்துவாகச் சிவபெருமான் தத்துவங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவராகத் திகழ்கிறார். அவரே அனைத்து உயிர்களுக்கும் அனைத்து உலகங்களுக்கும் தனிப் பெரும் ஸாக்ஷியாக ஒளிர்கிறார். அனைத்து உயிர்களுக்கும் அனைத்து வகைகளாலும் அருள்பாலிக்க அவர் ஸதாசிவத் திருமேனி கொண்டு விளங்குகிறார். "அனைத்து உயிர்களினுள்ளும் உயிருக்கும் உயிராக யானே உள்ளேன். நான் ஹகார அக்ஷரத்தில் ஐக்கியப் பட்டுள்ளேன்." இவ்வாறு முடிவான ரகசியத்தை உணர்த்தியருளி ஸ்ரீ நடராஜ ராஜேஶ்வரப் பெருமான் முனிவர்களின் பார்வையிலிருந்து தம்மை மறைத்துக் கொண்டார்.

முதலாவதான அகாரமும் முடிவானதான ஹகாரமும் இணைய அஹம் எனும் சொல் உருவாகிறது. அஹம் என்பதில் 51 எழுத்துக்களும் அடங்கியுள்ளன. ஒவ்வோர் எழுத்தினுள்ளும் சிவபெருமானே நிறைந்திருக்கிறார். அஹமாத்மா என்பதன் உட்கருத்து இதுவே.

ஹகாரஶ்ஶிவவர்ணஸ்யாத் என ஆகமங்கள் பலவற்றிலும் கூறப் பட்டுள்ளது. ஹகாரம் சிவபெருமானையும் ஆகாயத்தையும் குறிப்பதால் சிற்றம்பலத்தில் ஆனந்த நடனம் செய்தருளும் ஸ்ரீ நடராஜப்பெருமான் எல்லா உயிர்களினுள்ளும் எல்லா அக்ஷரங்களினுள்ளும் தாமே நிறைந்து இருப்பதை முடிவான ரகசியமாக உணர்த்தியருள்கிறார்.

36 தத்துவங்களும் அக்ஷரங்களிலிருந்து எவ்வாறு தோன்றுகின்றன என இங்கே தொகுத்துக் கூறப்படுகிறது. சிவ தத்துவம், சக்தி தத்துவம், ஸதாசிவ தத்துவம், ஈஶ்வர தத்துவம், சுத்தவித்யா தத்துவம் எனும் சிவதத்துவங்கள் ஐந்தும் காலம், நியதி, மாயை, கலை, வித்யை, அராகம், புருஷதத்துவம், பிரகிருதி எனும் தத்துவங்கள் எட்டும் ஆகப் பதின்மூன்று தத்துவங்களும் பதின்மூன்றாவது அக்ஷரமாகிய ஓங்காரத்திலிருந்து தோன்றுகின்றன.

| | | | |
|---|---|---|---|
| 14 | புத்தி தத்துவம் | டகாரம் | ட |
| 15 | அஹங்கார தத்துவம் | தகாரம் | த |

| | | | |
|---|---|---|---|
| 16 | மனஸ் தத்துவம் | சகாரம் | ச |
| 17 | செவி | ஜகாரம் | ஜ |
| 18 | தோல் | பகாரம் | ஸ |
| 19 | கண் | ககாரம் | ம |
| 20 | நாக்கு | தகாரம் | ஓ |
| 21 | மூக்கு | டகாரம் | ஆ |
| 22 | வாக்கு | ஜகாரம் | ஙு |
| 23 | பாணி | பகாரம் | ஹ |
| 24 | பாதம் | ககாரம் | வு |
| 25 | பாயு | டகாரம் | ஜ |
| 26 | உபஸ்தம் | தகாரம் | ய |
| 27 | ஸப்தம் | ஞகாரம் | ஞ |
| 28 | ஸ்பர்ஸம் | மகாரம் | ஃ |
| 29 | ரூபம் | ஙகாரம் | ஜ |
| 30 | ரஸம் | ணகாரம் | ண |
| 31 | கந்தம் | நகாரம் | ந |
| 32 | ஆகாயம் | ஹகாரம் | ஹ |
| 33 | காற்று | யகாரம் | ய |
| 34 | நெருப்பு | ரகாரம் | ர |
| 35 | நீர் | வகாரம் | வ |
| 36 | நிலம் | லகாரம் | ல |

பிராணன், அபானன், வ்யானன், உதானன், ஸமானன் எனும் ஐந்து பிராணன்களும் க, ப, ச, ட, த எனப்படும் ஐந்து அக்ஷரங்களிலிருந்து முறையே தோன்றுகின்றன எனப் பதினொன்றாம் ஸூத்திரத்தில் கூறப்படுகிறது.

பிராகிருத நிலையில் ஸத்த்வம், ரஜஸ், தமஸ் எனப்படும் மூன்றும் முறையே ஸ, ஷ, ஸ எனும் மூன்று அக்ஷரங்களிலிருந்து தோன்றுகின்றன எனப் பதின்மூன்றாவது ஸூத்திரத்தில் கூறப்படுகிறது.

பிராணன் முதலான வாயுக்களும் ஸத்துவம் முதலான மூன்று குணங்களும் 36 தத்துவ நிரலுக்குள் சேர்க்கப் படாதவை. இவை தாத்துவிகங்கள் எனப்படும். தாத்துவிகங்கள் மொத்தம் அறுபது. முப்பத்தாறு தத்துவங்களும் அறுபது தாத்துவிகங்களும் சேர்ந்துதான் நமது உடலைச் செயல்பட வைக்கின்றன.

ஆறும் ஆறும் அஞ்சும் அஞ்சும் ஆறும் ஆறும் அஞ்சும் அஞ்சும்
ஆறும் ஆறும் அஞ்சும் அஞ்சும் அறுநாலும்
ஆறு மாய சஞ்ச லங்கள் வேற தாவி ளங்கு கின்ற
ஆர ணாக மங்க டந்த கலையான

எனப் பாடுவார் அருணகிரிநாதப் பெருமான்.

6 + 6 + 5 + 5 + 6 + 6 + 5 + 5 + 6 + 6 + 5 + 5 + 24 (6 x 4) + 6 = 96

மாயையிலிருந்து கலை தோன்றும்; கலையிலிருந்து வித்யை தோனறும்; வித்யையிலிருந்து அராகம் தோன்றும் என ஒரு தத்துவத்திலிருந்து மற்றொரு தத்துவம் தோன்றுகின்ற முறைப்பாட்டை ஆகம ஞானபாதம் விளக்கிக் கூறுகிறது.

ஆனால் மஹேஶ்வர ஸூத்திரத்தில் இந்தத் தத்துவங்களெல்லாம் உரிய அக்ஷரங்களிலிருந்து தோன்றுவனவாகக் கூறப்படுகிறது.

ஏன் இந்த முரண்பாடு எனக் கேட்கலாம்.

முரண்பாடு என்பது சிறிதளவும் இங்கே இல்லை.

ஞானபாதம் கூறுகின்ற தத்துவத் தோற்றமுறை அர்த்தப் பிரபஞ்ச சம்பந்தமானது. மஹேஶ்வர ஸூத்திரம் கூறுகின்ற தத்துவத் தோற்றமுறை ஶப்தப் பிரபஞ்ச சம்பந்தமானது.

எனவே பரிபூரணமான சைவசித்தாந்த போதானுபவத்திற்கு ஆகம ஞானபாதம் மஹேஶ்வர ஸூத்திரம் ஆகிய இரண்டுமே மிக மிக அவசியமாகும் எனப் புலனாகிறது.

ஸ்ரீ நந்திகேஶ காஶிகை நிறைவு பெறுகிறது

தமிழ் ஸம்ஸ்க்ருதம் என்றெல்லாம் எழும்
பேத உணர்வுகளுக்கு இடம் கொடுக்காமல்
சிவபெருமானின் அருட்பேற்றை மட்டுமே விழைந்து
சிவ வழிபாட்டில் ஈடுபட்டிருக்கும்
சைவ அன்பர்கள் அனைவர்க்கும்
இந்த நூல்
பணிவுடனும் ஆழ்ந்த அன்புடனும்
சமர்ப்பிக்கப் படுகிறது.



வாமதேவசிவம் Dr. S.P. சபாரத்ன சிவாசாரியார்
வாமதேவ சிவசக்தி ஸ்ரீமதி விஜயலட்சுமி சபாரத்னம்




சைவமரபுக்கும் சைவ ஆகமங்களுக்கும் இன்று மிகப்பெரிய அரண் ஆகத் திகழும் கௌவை ஆதீனத்தை (Hawaii, U.S.A.) நிறுவிய பூஜ்யஸ்ரீ சிவாய சுப்பிரமுனிய ஸ்வாமிகளும் இன்றைய குருமகா ஸந்நிதானமாகத் திகழும் ஸ்ரீலஸ்ரீ போதிநாத வேலன் ஸ்வாமிகளும்

குருதேவரால் கௌவை ஆதீனத்தில் நிர்மாணிக்கப் பட்டுள்ள கடவுள் திருக்கோயிலில் உத்தமத்தில் உத்தமான வழிபாடு (எட்டுக் கால பூஜை) தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. 1973-ஆம் ஆண்டு தொடங்கிய நாளிலிருந்து இந்த ஆலயத்தின் கதவுகள் சார்த்தப்பட்டதே இல்லை.

ஆதி சைவ மரபு இந்த ஆதீனத்திற்கு மிகவும் கடமைப்பட்டுள்ளது.